# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10/-
அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K P. இளங்கோவன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 2 15-9-83 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை இதழ் 7/10

## தென்னிந்திய வானொலி நிலையங்களில் நாதசுரக் கலைஞர்கள் நியமனம்

'நாகஸ்வராளி' சபை, இசை வேளாளர் சங்கங்கள் முறையீடு

தென்னிந்திய வானொலி நிலையங்களில் பல இசைக் கருவி கலைஞர்கள் முழு நேர ஊழியர்களாக தற்பொழுது பணியாற்றி வருகின்றனர். ஆனால் நாகசுர தவில் கலைஞர்களை மட்டும் ஏனோ இதுவரை முழுநேர ஊழியர்களாக நியமனம் செய்யவில்லை. இதுபற்றி தீர்மானங்கள் இயற்றி தமிழக இசை வேளாளர் சங்கங்கள் இந்திய அரசுக்கும், வானொலி பொது தலைமை இயக்குநருக்கும் பல வருடங்களாக அனுப்பியுள்ளனர்.

தற்பொழுது நாதசுரக் கலை மேம்பாட்டுக்காக பாடுபட்டு வரும் சென்னை சபையான 'நாகஸ்வராளி'யின் செயலாளர் இந்தியத் தலைநகரான புதுடில்லிக்கு நேரில் சென்று அகில இந்திய வானொலி AIR பொது தலைமை இயக்குநரிடமும், மத்திய தகவல் ஒலிபரப்பு அமைச்சகத்திடமும் முறையீடுகளை தந்துள்ளார்.

1. தென்னிந்திய வானொலி நிலையங்களில் நாதசுர தவில் கலைஞர்கள் முழுநேர ஊழியர்களாக நியமனம் செய்யப்பட வேண்டும்.

2. இந்திய கலாசாரப் பரிவர்த்தனைக் கவுன்சிலின் (Indian council cultural Ralation) அயல்நாடுகளுக்கு இங்கிருந்து அனுப்பப்படும் கலாச்சாரக் குழுக்களில் நாதசுர தவில் கலைஞர்களுக்கு உரிய இடங்கள் அளிக்கப்பட வேண்டும்.

3. தேசிய ஒருமைப்பாட்டை ஏற்படுத்தும் வகையில் நாதசுர-தவில் கலைஞர்களை ஷெனாய்—தபலா கலைஞர்களுடன் சேர்ந்து 'ஜுகல்பந்தி' கச்சேரிகள் நடத்த ஆதரவு தரவேண்டும்.

மேலைநாடுகளிலும் நாதசுர தவில் கலைக்கு புகழ் பரவி வரும் இந்த நேரத்தில் இந்திய அரசு மேற்கண்ட கோரிக்கைகளை ஏற்கும் என்று நம்பப்படுகின்றது.



## சண்முக கவசம் இசைச்சுட்டி A. V. M. வெளியிட்டது!

பாம்பன் குமரகுருதாசசுவாமிகள் பாடியது சண்முக கவசம். இதனை பதினைந்து இராகங்களில் இசையமைத்து இசைச்சுட்டியில் (காசட்) பாடியுள்ளார் வடபழநி ஓதுவார் 'கலைமாமணி' N. ஆறுமுக ஓதுவார். இதனை சமீபத்தில் A. V. M. மியூசிக் சர்வீசு என்ற நிறுவனம் வெளியிட்டுள்ளது.

நல்ல முறையில் பாடியுள்ள ஓதுவாருக்கு வாழ்த்துகள்!

## ரகுமாயி ராமனின் 'சேலஞ்சர்ஸ்' மெல்லிசைக்குழு



தமிழகம், இலங்கை, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் பல இடங்களில் இன்னிசை, மெல்லிசை நிகழ்ச்சிகள் நடத்திய பிரபல பாடகி ரகுமாயிராமன் 'திசேலஞ்சர்ஸ் என்ற பெயரில் ஓர் மெல்லிசைக் குழு அமைத்துள்ளார். சமீபத்தில் மாருதி என்ற பெரும் துணிவியாபாரிகள் முதலாண்டு விழாவில் இக்குழுவின் நிகழ்ச்சி சென்னை மியூசிக் அகடமியில் நடைபெற்றது. 20 பேர் இந் நிகழ்ச்சியில் பங்கு பெற்றனர். ரகுமாயி ராமனுடன் அவரது கணவர் ராமன் சுந்தரராஜன், சாய்ராம் ஆகியோர் பக்தி பாடல்கள் திரைப்பட பாடல்கள் பாடி நிகழ்ச்சியை சிறப்பித்தனர்.

சேலஞ்சர்ஸ் ரகுமாயி-ராமனுக்கு இயலிசை வாழ்த்துகள்!

## திருமண வாழ்த்து !

பம்பாய் ஸ்ரீ இராஜராஜேஸ்வரி பரதநாட்டிய கலா மந்திர் இயக்குநர் திரு. A. T. கோவிந்தராசபிள்ளையின் மகள் செல்வி இராஜேசுவரிக்கும் செல்வன் V. நடராசன் M.A. அவர்கள் திருமணமும். மகன் செல்வன் கோபால கிருஷ்ணன், செல்வி மணிமேகலை இவர்கள் திருமணமும் 26-8-83 அன்று தஞ்சை மாவட்டம் சுவாமிமலையில் நடைபெற்றது. திருமணத்திற்கு இஞ்சிக்குடி P. சுந்தசாமி பிள்ளை சகோதரர்கள் குழுவினர் நாதசுர இசை வழங்கினர். திருவிடை மருதூர் S. மகாலிங்கம் தனித் தவில் வாசித்தார்.

* * *

இயலிசை ஆதரவாளரும் கந்தன் அருட்சங்க தலைவருமான திரு T. S. மோகனரங்கம் மகன் T. M. மீனாட்சி சுந்தரம் செல்வி குமுதவல்லி திருமணம் 21-8-83 அன்று சென்னையில் நடைபெற்றது. மணமக்களுக்கு இயலிசை வாழ்த்துக்கள்!

தமிழ்நாடு அரசு இசைக் கல்லூரிகளின் சிறப்பு இயக்குநர் மூத்தமிழ் இசைச் சித்தர் சிதம்பரம் S. ஜெயராமன் புதல்வி செல்வி குணசுந்தரிக்கும் கோவை வேளாண்மைத்துறை அலுவலர் S.சச்சிதானந்தத்திற்கும் 9-9-83 அன்று சென்னையில் திருமணம் நடைபெற்றது.

## சிறந்த பணிக்கு எமது பாராட்டு

இயலிசையின் பணி மிகச் சிறப்பானது இன்றியமையாதது. ஆரம்பத்திலிருந்தே இதன் பணிகளை நான் நன்கு கவனித்து வருகின்றேன். கலை உலகிற்கு இது மிகவும் பயனுள்ளதாகும் தங்கள் இப்பணி செய்வதைப் பாராட்டுகின்றேன். உங்களுக்கு எல்லாவிதமான ஆதரவும் தந்து வாழ்த்துகின்றேன். இயலிசைக்காக எனது நன்கொடையாக ரூ. 25/- அனுப்பியிருக்கின்றேன்.

'கலைமாமணி'
தஞ்சாவூர் உபேந்திரன்,
மிருதங்கம்
சென்னை—28.

கலைத் தொடர் கதை

# ஆடலரசி அபிராமி

## 8. சலங்கை செய்த வேலை

'உண்ட களைப்பு தொண்டர்க்கும் உண்டு' என்பது ஓர் வேடிக்கை பழமொழி. கருமமே கண்ணாயினர் ஆயினும், பசி நோக்கார் கண்துஞ்சார் எனினும் வயிறார உண்டு விட்டால் ஒரு சிறு தூக்கம் போட்டு எழுந்தால்தான் களைப்பு நீங்கும். ராச விருந்து உண்ட கலைஞர்கள் அனைவரும் ஒவ்வொரு மூலையில் சாய்ந்தனர். புதுக்கோட்டை ராசா மாளிகை மேல்மாடியில் ஒரு அறையில் நட்டுவனார் கணபதி பிள்ளை குறட்டை விட்டே தூங்க ஆரம்பித்துவிட்டார். அபிராமிக்கு கொடுத்த அறையின் மஞ்சத்தில் மங்களம் படுத்தவள் தான். இரண்டு ஜீவன்கள் மட்டும் தூங்கவில்லை.

மாளிகை மாடியிலுள்ள ஒரு சிறு கூடத்தில் திண்டுபோட்ட இருக்கைகளில் இளையராசாவும், அபிராமியும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். நடுவில் தாம்பூல தாம்பாளமும், பழத்தட்டும் இருந்தது. சுற்றி இருந்த உதவியாளர்கள் — அந்தரங்க உதவியாளர் சங்கிலி உட்பட அவர்கள் தனிமையைக் கெடுக்க விரும்பாமல் கீழே இறங்கி சென்றுவிட்டனர்.

இளையராசாதான் பேச்சை துவக்கினார்.

கலைத்தேவி அபிராமிக்கு களைப்பு இல்லையா சற்று ஓய்வு எடுத்துக் கொள்ளக் கூடாது? என்று கேட்டார்.

அபிராமி ஒருபழத்தை எடுத்து நறுக்கியவாறு. 'கொஞ்சம் தாமதமாக வந்ததற்கே நான் தண்டனை அடைந்துள்ளேன். இன்னும் நாலு வார்த்தை கூட இளையராசாவிடம் பேசாமல் ஓய்வெடுக்க சென்றுவிட்டால் என்ன தண்டனை கிடைக்குமோ' என்றாள்.

'என்ன அபிராமி, எனது மாளிகைக்கு வரும் விருந்தினர்க்காக காத்திருக்க வேண்டியதும் பழத்தை நறுக்கிக் கொடுப்பதும் எனது கடமையல்லவா. அப்படி என்ன தண்டனை யான் கொடுத்தேன், காரியத்துக்கு வந்து வரவேற்கவில்லையென்று கோபமா. அல்லது உனது கலைக்கு யான் அளித்த சன்மானம் சிறிதாகப் போய்விட்டது என்ற வருத்தமா' என்று இளையராசா கேட்டார்.

'உம்... அதெல்லாம் ஒன்றுமில்லை. எனது காலைப்பாருங்கள்' என வலது கால் பாதத்தை இளையராசா முன் நீட்டினாள் அபிராமி. அவள் சிம்ம நந்தனம் நடனம் ஆடும்பொழுது உடைந்த சலங்கை மணி ஒன்று தாக்கி பாதத்தில் காயம் பட்டிருந்தது. சிறிது ரத்தமும் கசிந்திருந்தது. இளையராசாவுக்கோ காலோ காயமோ தெரியவில்லை. கமலம் போன்ற மிருதுவான பாதமும் எலுமிச்சம் பழ நிறத்தில் இருந்த அவளது காலும் அவரை ஒரு கணம் மெய் மறக்க செய்தது. காலைத் தொட்டு காயத்தைத் தடவி ஆறுதல் சொல்ல வந்தவர் சட்டென்று தயங்கினார். தயக்கத்திற்கு காரணம் அவரது ராச மரியாதையல்ல, அபிராமி என்ன நினைத்துக் கொள்வாளோ என்ற ஐயமே.

ஆனால், அபிராமி 'ஊம்... ஏழை நடனச் சிறுமி கால் காயத்தில் இளையராசா கரம்படலாமா?' என்று சொன்னவுடன் இளையராசாவுக்கு தைரியம் வந்தது. 'அப்படி ஒன்றுமில்லை' என்று கூறியவாறு காயத்தையும் காலையும் தடவி விட்டார். அபிராமி உடலில் ஆயிரம் மாற்றங்கள் என்றாலும் அவளது முகத்தில் ஓர் வெற்றிப் புன்னகை அதனைத் தான் நாம் கவனிக்க வேண்டும்.

இன்று தான் இந்த அளவு அவர்கள் பழகுகின்றார்கள். இவர்கள் பழக்கம் கடந்த ஆறு மாத காலமாகத் தான். தஞ்சாவூர் அருகில் உள்ள மாரியம்மன் திருவிழாவிற்கு நடனமாட வந்த அபிராமியை எதிர்பாராத விதமாக இளையராசா சந்தித்ததே இருவருக்கும் ஓர் சுவையான அனுபவம்.

இளையராசா பெரிய இடத்துப் பிள்ளையாக இருந்தாலும் ஒழுக்கமுடையவர். அவரைப் பற்றி அவரது சமஸ்தானத்திலும் பிற இடங்களிலும் நல்ல பெயர். சிறந்த கலாரசிகர். அதன் காரணமாக தஞ்சை மாவட்டத்திற்கு அடிக்கடி வந்து நல்ல கலை நிகழ்ச்சிகளில் வந்து கலந்து கொள்வார். கலைஞர்களுக்கு திடீர் சன்மானங்களும் வழங்குவார். அவரைப் பார்த்தாலேயே கலைஞர்களுக்கு உற்சாகம் பிறக்கும். என்றாலும் சதுர் கச்சேரியில் அதிக நேரம் நிற்பதில்லை. அதற்குப் பல காரணங்கள் உண்டு.

அக்காலத்தில் சதுர் கச்சேரிகளில் சில சில்லறை விவகாரங்களும் நடந்து விடும். சதுர் கச்சேரி ரசிகர்கள் நடுவில் சில பெரிய இடத்துப் பிள்ளைகளும் நிற்கும். அக்கால மொழியில் சொன்னால் மிட்டா மிராசு மைனர்கள். அவர்களில் சிலர் நடனத்தையும் நடன நங்கையர் எழிலையும் பார்த்து சென்று விடுவர், சிலரோ அவர்களையே விலை பேசி விடுவர். சில நடனமணிகள் பெரிய இடத்துப் பிள்ளைகள் வந்தால் அவர்கள் பக்கமாக ஆடி சிரித்து அவர்களைத் தன் வலையில் போட்டுக் கொள்வதுமுண்டு.

தங்கள் விருப்பத்தைத் தெரிவிக்கும் வகையில் இந்த பேர்வழிகள் பல வழிகளும் கையாளுவதுண்டு. சில சமயம் நடனமாடும் பெண்களிடம் தங்கள் கைக்குட்டைகளைக் கொடுப்பார்கள். அவர்கள் நடனமாடிக் கொண்டே - அதாவது காலில் தாளத்திற்கு ஏற்றவாறு ஓர் அடைவு போட்டுக் கொண்டே அந்த கைக்குட்டையில் பூ, கிளி, கப்பல் போன்ற உருவங்களை செய்து கொடுப்பார்கள். இதிலேயே பல ரகசிய சைகைகள் (பரிபாஷை) இருந்ததாகவும் சொல்வர்.

ஆயினும் அபிராமி வசம் யாரும் இந்த குறும்புகளைச் செய்வதில்லை. காரணம் அவர் அரங்கேற்றமான நாளிலிருந்தே யாரையும் ஏறெடுத்துப் பார்ப்பதில்லை. அவளது திடீர் புகழுக்கு அதுவும் ஒரு காரணமாக இருந்தது. எல்லோரிடமும் கலகலப்பாக அவள் பழகுவாள், பேசுவாள். ஆனால் அவற்றில் தவறு கண்டுபிடிக்க முடியாது.

தஞ்சாவூர் அடுத்த மாரியம்மன் கோயில் தெய்வம் மிகவும் பிரபலமானது. சக்தி வாய்ந்தது. வெள்ளைக்கார துரை ஒருவரை ஆபத்திலிருந்து அந்த மகமாயி காப்பாற்றியதாக வரலாறும் ஒன்று இருந்ததால் ஆங்கிலேயரும் அக்கோவிலில் மதிப்பு வைத்திருந்தனர்.

தஞ்சாவூர் வந்தால் மாரியம்மனை தரிசனம் செய்து செல்வது இளைய ராசாவுக்கு வழக்கம். அவ்வாறு அன்று மாரியம்மன் கோயிலுக்கு இளையராசா வந்த போது அந்த ஊரில் ஏதோ ஒரு தனி விசேஷம் இருப்பதனை உணர்ந்தார். விசாரித்ததில் புது இளம் நடனமாது சதுர் கச்சேரி அன்று இருப்பதாகவும், அவளும் மிக அற்புதமாக ஆடுவதாகவும் கேள்விப்பட்டார். சிறிது நேரம் ரசித்து விட்டு செல்லலாம் என்று நின்ற அவருக்கு அபிராமி எழிலும் கலையும் முழு நிகழ்ச்சிக்கும் அவரை நிறுத்தி விட்டது. அங்கு உயர்வான கலையம்சம் இருப்பதனையும், பேரழகுள்ள அபிராமியை மக்களும் ஏதோ ஒரு பக்தியுடன் பார்ப்பதனையும் கண்ட அவருக்கு அவரையும் அறியாமல் அபிராமி மீது ஈடுபாடு கொள்ளச் செய்தது. எனினும் மிக நெருங்கி நிற்காமல் சற்று தூரத்திலேயே நின்று ரசித்து வந்தார். நடனமாதும் குழுவினரும் கௌரவமாக நடந்து நடனக் கலைக்கே பெருமை சேர்த்துக் கொண்டிருந்தனர்.

குத்தாலம் கணபதி பிள்ளை புதுக்கோட்டை இளையராஜா வந்திருக்கின்றார் என்றறிந்ததும் புதுக்கோட்டை அரசர் மீது ஒரு பெண் காதல் கொண்டு ஆடுவது போன்ற அமைப்பு கொண்ட

(தொடர்ச்சி 3-ம் பக்கம்)



## திண்டுக்கல் அருள்மிகு வெள்ளை விநாயகர் 28-வது ஆண்டு சதுர்த்தி விழா

இரவு 8 மணி கலை நிகழ்ச்சிகள்

| | |
|---|---|
| 24-8-83 | பேட்டைவாய்த்தலை S. சண்முகசுந்தரம், P. நாகராசன் குழுவினர் நாதசுரம் |
| 25-8-83 | திருப்பனந்தாள் T. V. சுசீலா, T. V. இந்திரா குழுவினர் இன்னிசை |
| 26-8-83 | ஷேக் மெகபூப் சுபானி, திருமதி காலி ஷாபி மெகபூப் குழுவினர் நாதசுரம் |
| 27-8-83 | டாக்டர் சரசுவதி இராமநாதன் சொற்பொழிவு |
| 28-8-83 | பட்டிமன்றம் |
| 29-8-83 | கரந்தை V. S. சுப்புலட்சுமி வில்லுபாட்டு |
| 30-8-83 | வால்குடி திருமங்கலம் S. V. மீனாட்சிசுந்தரம் நாதசுரம் திருமாளூர் T. P. ராஜரத்தினம் திருமருகல் R. சேகர் தவில்கள் |
| 31-8-83 | திருவானைக்காவல் சகோதரிகள் S. மாதங்கி, S. மதுமதி இன்னிசை |
| 1-9-83 | வழக்காடுமன்றம் |
| 2-9-83 | கொப்பம்பட்டி N. பாஸ்கரன் நாதசுரம் |
| 3-9-83 | டாக்டர் மதுரை S. சோமசுந்தரம் இன்னிசை |
| 4-9-83 | கோவை R. கமலா குழுவினர் |
| 5-9-83 | மதுரை T. N. சேஷகோபாலன் குழுவினர் |
| 6-9-83 / 7-9-83 | தஞ்சாவூர் T. R. கமலாமூர்த்தி இசைச் சொற்பொழிவு |
| 8-9-83 | வழக்காடுமன்றம் |
| 9-9-83 | மகாதானபுரம் சகோதரிகள் பாட்டு-வயலின்-மிருதங்கம் |
| 10-9-83 | திருவானைக்காவல் T. K. ரத்தினம் — நாதசுரம் தஞ்சாவூர் T. R. கோவிந்தராசன் தென்சித்தூர் S. N. சுந்தரம் — தவில்கள் |
| 11-9-83 | பழனி சிவ. ஆறுமுகம் குழுவினர் இன்னிசை |

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

பாடல் (வர்ணம்) முக்கிய அம்சமாக அன்று அமைந்துக் கொண்டார். ஆனல் அபிராமிக்கு அதன் காரணத்தைச் சொல்லவில்லை. நிகழ்ச்சி முடிந்ததும் கணபதிப் பிள்ளை பெரிய மனிதர்கள் அறிமுகப் படுத்தும் நேரத்தில் தான் இளையராசாவையும் அபிராமிக்கு அறிமுகப்படுத்தினார். அப்பொழுது தான் இருவரும் நேருக்கு நேர் சந்தித்துக் கொண்டார்கள். தெய்வ சம்மதமோ சோதனையோ இருவர் மனத்திலும் மற்றவர் பற்றி நல்ல அபிப்ராயம் அன்றே ஏற்பட்டது. ஒரே கணத்தில் நீண்ட நாள் பழகிய நண்பர்கள் போல் பேச ஆரம்பித்தனர். இதுவரை எத்தனையோ பேர் பாராட்டியிருந்தாலும் இன்று கிடைத்த இளையராசாவின் பாராட்டு அவளுக்கு மிக மகிழ்வினைத் தந்தது.

எந்த பெரிய மனிதரிடமும் இந்த அளவு ஆழமாகப் பேசாத அபிராமி இளையராசவிடம் பேசுவதனைக் கண்ட நட்டுவனார் 'நான் வளர்த்த குட்டியல்லவா, பிடித்தாலும் புளியங் கொம்பைத் தான் பிடித்துள்ளாள்' என்று தனக்குத்தானே பாராட்டு தெரிவித்துக் கொண்டார். இளையராசாவிடம் தங்கள் அடுத்த நிகழ்ச்சி விபரம் சொல்லி வந்து சிறப்பிக்கும்படி கேட்டுக் கொண்டார்,

'முடிந்தால் வருகின்றேன்' என்று அவளுக்கு பதில் சொன்னார் அவர். அபிராமியிடம் விடை பெற்றுக் கொள்ள திரும்பியவர் அவள் கண்கள் பேசுவதனைக் கண்டார். இருவர் கண்களும் பேசின. 'வரவேண்டும்', 'வருகிறேன்' என்ற வார்த்தைகளைத் தான்!

பின்னர் பல நிகழ்ச்சிகளுக்கு அவர் வந்தார். அவரது சிபாரிசிலும் பல இடங்களில் அபிராமிக்கு வாய்ப்புகள் கிடைத்தன. அவரது நட்பினால் அபிராமிக்கு பெயருடன் ஒரு வித செல்வாக்கும் கிடைத்தது. ஆயினும் இவர்களது நட்புக்கு பலர் எதிர்ப்பும் மறைமுகமாக இருக்கத்தான் செய்தது. (தொடரும்)

## அருள்மிகு தேவி கருமாரியம்மன் திருக்கோயில்

திருவேற்காடு, சென்னை-77.



★

### ஆடிப் பெருந் திருவிழா இன்னிசை நிகழ்ச்சி விபரம்

| | | |
|---|---|---|
| 17-7-83 | இரவு | சிவா மியூசியானோ — சிவா குழுவினர் |
| 24-7-83 | ,, | T. M. S. செல்வகுமார் குழுவினர் |
| 31-7-83 | காலை | C. V. பானுமதி, C. V. கிரிஜா குழுவினர் |
| ,, | இரவு | சங்கர்-கணேஷ் குழுவினர் மெல்லிசை |
| 7-8-83 | காலை | சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம் குழுவினர் |
| ,, | இரவு | வடபழநி N. ஆறுமுக ஓதுவார் |
| 14-8-83 | காலை | K. வீரமணி, ராதா, சோமு குழுவினர் மெல்லிசை |
| ,, | இரவு | வேதாரண்யம் S. வேதையன் - தேவாரம் |
| 21-8-83 | காலை | காஞ்சிபுரம் விநாயக முதலியார் - தேவாரம் |
| ,, | இரவு | முத்துராசா குழுவினர் பக்திப் பாடல்கள் |
| 28-8-83 | காலை | குருவாயூர் பொன்னம்மாள் குழுவினர் |
| ,, | இரவு | ஸ்ரீகணநாதர் பொம்மை நாடக மன்றம் |
| 4-9-83 | இரவு | சுப்பு ஆறுமுகம் குழுவினர் வில்லுப் பாட்டு |
| 11-9-83 | ,, | T. K. S. கலைவாணன் குழுவினர் |
| 18-9-83 | ,, | M. S. விசுவநாதன் குழுவினர் மெல்லிசை |
| 2-10-83 | ,, | குமாரி வத்சலா குழுவினர் மெல்லிசை |



## அருள்மிகு நவசக்தி விநாயகர் ஆலயம்

லஸ், மயிலை, சென்னை-4.

### விநாயக சதுர்த்தி கலைவிழா நிகழ்ச்சிகள்

| | | |
|---|---|---|
| 9-9-83 | மாலை 7-30 | செல்வி ஷண்முகப்பிரியா (ஔவை T. K. S. சண்முகம் அவர்களின் 9 வயது பேத்தி) இன்னிசை |
| | இரவு 9-00 | கங்கை அமரன் குழுவினர் மெல்லிசை |
| 10-9-83 | மாலை 7-30 | விஜயகல்பகம் வீணை |
| | இரவு 9-00 | K. வீரமணி, ராதா, சோமு குழுவினர் மெல்லிசை |
| 11-9-83 | மாலை 7-30 | குமாரி பத்மாவதி - வீணை K. R. குமார் மிருதங்கம் |
| | இரவு 9-00 | கோவை R. கமலா குழுவினர் |
| 12-9-83 | இரவு 8-00 | S. R. மலர்க்கொடி இசைச்சொற்பொழிவு |
| 13-9-83 | ,, | கணேஷ் அளிக்கும் 'ஸ்மாஷ்ரிதம்ஸ்' மெல்லிசை |
| 14-9-83 | ,, | 'கடவுளை நம்பினோர்' நாடகம் |
| 15-9-82 | ,, | காளஹஸ்தி M. A. வசந்தகுமாரி, M. V. சாந்தகுமாரி நாதசுரம் மயிலை P. S. வெங்கடேசன், P. V. தட்சிணாமூர்த்தி தவில் |
| 16-9-83 | ,, | M. P. அய்யாவு புல்புல்தாரா |
| 17-9-83 | ,, | U. R. ஜீவரத்னம் குழுவினர் இன்னிசை |

TN/MS(S) 260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T Thirunavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai Street, Vadapalani, Madras 600 026. Published & Edited by M. Lakshmi. 57, South Sivan Koil Street, KODAMBAKKAM, MADRAS - 600 024.






# ஆதனூர் அரிதாசு மாணவரின் மிருதங்க அரங்கேற்றம்

பலமாணவர்களுக்குமிருதங்கம் வாசிக்க கற்று கொடுத்து அரங்கேற்றம் செய்துள்ளார். மிருதங்கக் கலைஞர். ஆதனூர் P. அரிதாசு M. A. B. SC. Dip Indian music இவரது மாணவர் V. பாலசுப்ரமணியனின் மிருதங்க அரங்கேற்றம் 27-7-83 அன்று சென்னை புரசவாக்கத்தில் நடைபெற்றது. இசைக் கலைஞர் போலோகம் A. K. சாம்பசிவம் பாட்டுக்கு, திருவள்ளூர் V. பார்த்தசாரதி பிடில் வாசிக்க V. பால சுப்ரமணியன் மிருதங்கம் வாசித்து அரங்கேற்றம் செய்தார். தனி ஆவர்த்தனத்தில் இதர லய துணைக்கருவியாளர்களுடன் நன்கு கலந்து வாசித்து தனது திறமையை ரசிகர்களுக்கு தெரிவித்தார். நிகழ்ச்சிக்கு தலைமை வகித்த தமிழ்நாடு இசைக்கல்லூரி முதல்வர் பேராசிரியர் T. N. கிருஷ்ணன் அனைவரையும் பாராட்டி பேசினர். பல இசைக் கலைஞர்களும் வந்திருந்தனர்.

கடிதம்

## புனித வாழ்வு பூக்கும்

இயலிசையே இறை வடிவம்
 இயலிசையே இதயத்தின் இன்ப ஊற்று
இயலிசையே எவரையும்
 இணைவிக்கும் ஈடில்லா தாய்மை யன்பு
இயலிசையே உயிரென்று
 எக்காலும் எண்ணுபவர் எனது நண்பர்
இயலிசையே இந்நாட்டில்
 ஏற்றமுடன் வளர்ப்பதனால் என்றும் வாழி!

இருந்தார் இருப்போர் ஏற்றத்தை
 எழிலாய்க் காட்டி இயலிசையை
விருந்தா யளிக்கும் மாதம் இரு
 விளக்க இதழைத் துலக்குமுற
மருந்தா யமிர்தாய் மனதேற்றில்
 மாளாத் துயரும் பாப்பிசையும்
பொருந்தா நிலையும் பொய்த்தகலும்
 புனித வாழ்வும் பூந்திடுமே



—புலவர் ச. சுந்தரேசன்
ஆசிரியர் 'வேளாளன்'
சிதம்பரம்

நடன அரங்கேற்றங்கள்

## மனதைக் கவர்ந்த கலைஞர்களின் நாட்டியச் செல்விகள்!

சென்ற 29-7-83 அன்று சென்னை RR சபையில் வயலின் கலைஞர் M. சந்திரசேகரன் அவர்களின் மகள் செல்வி பாரதியின் நடன அரங்கேற்றம் சிறப்புடன் நடைபெற்றது. நடன ஆசிரியை திருமதி K.J. சரசா தனது அனுபவத்தையும் கலையையும் பாரதி மூலம் ரசிகர்களுக்கு தெரிவித்தார்.

மிருதங்கக் கலைஞர் குருவாயூர் துரையின் மகள் செல்வி உஷாராணியின் நடன அரங்கேற்றம் 3-9-83 அன்று மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ சிவஞானம் அவர்கள் தலைமையில் சென்னை மயிலையில் நடைபெற்றது. இயல், இசை நாடக மன்ற செயலார் D. V. நாராயணசாமி, டாக்டர் செம்மங்குடி, D. K. பட்டம்மாள், நடனம் தனஞ்செயன், கவிஞர் கு. சா. கி. ஆகியோர் உஷாராணியையும், ஆசிரியை இந்திரா ராஜனையும் பாராட்டி பேசினர்கள்.

நடன மணிகளுக்கும் நல்ல முறையில் பாடம் தந்த ஆசிரியைகளுக்கும் இயலிசை வாழ்த்துகள்!

## மேளக் கலைஞர்கள் சிறப்பித்த முத்து பல்லக்கு விழா

தஞ்சாவூர் மாரியம்மன் கோவில் 63-ம் ஆண்டு முத்து பல்லக்குக்கு விழா 14-8-83 அன்று நடைபெற்றது. பல்லக்குக்கு நாதசுரம் தவில் வாசிக்க மேளக்கலைஞர்கள் குழுவினர் பலர் பட்டாளம் போல் வந்திருந்தனர். மதுரை MPN சகோதரர்களும் மற்றும் தஞ்சை மாவட்ட பெருங் கலைஞர்களும் வந்திருந்தனர். பிரபல தனித் தவில் கலைஞர்களும் பலர் வந்து வாசித்து விழாவினை சிறப்பித்தனர்.

சென்னை சகோதரிகள் C. V. பானுமதி C. V. கிரிஜா சகோதரிகள் கச்சேரியும், குடந்தை தேவி பிரசாத் வயலின் கச்சேரியும் இரவு நடைபெற்றது. இசை நிகழ்ச்சி ஏற்பாடுகளை நாதசுரம் கலைஞர் திருக்கருகாவூர் T. G. சுப்ரமணியம் செய்திருந்தார். விழா ஏற்பாடுகளை விழாக் குழுதலைவர் D. கந்தசாமி செட்டியார், செயலர் S. R. தங்கவேல் பிள்ளை, பொருளாளர் V. S. தங்கவேலன் ஆகியோர் செய்திருந்தனர்.

மாரியம்மன் கோவில் பற்றி இவ்விதழ் 'ஆடலரசி அபிராமி' கதையில் குறிப்பு வந்துள்ளதையும் படிக்கவும்.

## லவா-குசா சகோதரர்களின் லலிதமான இசை விருந்து !

சிதம்பரம் கீழத்தெருவில் உள்ள மாரியம்மன் கோவில் ஐந்தாம் திருவிழாவினை முன்விட்டு சிதம்பரம் சகோதரர்கள் D. சுவாமிநாதன் D. பால சுப்ரமணியம் இரு வயலின் கச்சேரி நடந்தது. இதற்கு தவில்கள் மட்டுமே துணைக்கருவியாக அவர்கள் பயன் படுத்திக் கொண்டார்கள். கப்பூர் T. S. சந்திரசேகரன் T.P. மாணிக்கம் தவில்கள் வாசித்தனர். ஏராள ரசிகர்கள் வந்து நிகழ்ச்சியைக் கேட்டு ரசித்து கலைஞர்கள் லவா குசா சகோதரர்கள் எனபாராட்டினர் இவர்கள் அண்ணாமலை பல்கலைக்கழக வயலின் விரிவுரையாளர் T. S. துரைசாமி பிள்ளையவர்கள் செல்வர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

நிகழ்ச்சி ஏற்பாடுகளை ஆலயத்துக்காக S. வைத்திநாதன் ராஜா மாரிமுத்து ஆகியோர் செய்திருந்தனர்.

## சைதாப்பேட்டை புரட்டாசி கிருத்திகை விழா

### சுவாமிமலையார் நாதசுர நிகழ்ச்சி!

சென்னை சைதாப்பேட்டை அருள்மிகு காரணீசுவரர் திருக்கோவிலில் வருடாவருடம் புரட்டாசி கிருத்திகையன்று முருகர் மயில்வாகன திருவீதி உலாவில் நல்ல நாகசுர நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து வருகின்றனர் திருக்கோவிலில் நாதசுர குழுவினர். இவ்வாண்டு இவ்விழா 26-9-83 அன்று நடைபெற உள்ளது. இதற்கு சுவாமிமலை நாதசுரக் கலைஞர் திரு. M. சுவாமிநாதன், P. S. கணேசன் இவர்கள் நாதசுரம் வாசிக்கின்றனர். கொராநாடு G. சண்முகம், T. T. செல்லையா, திருவிடை மருதூர் T. S. மகாலிங்கம் ஆகியோர் தனித் தவில்கள் வாசிக்கின்றனர். நாதசுரக் கலைஞர் சீனுவாசன் விழா ஏற்பாடுகளைச் செய்துள்ளார்.